உ

சிவமயம்

திருநெல்வேலி
புதுதெருவிலிருக்கும்
அழகியசொக்கநாதபிள்ளை
அவர்கள்பாடியசிங்காரப்பதம்

இஃது
கேளமபாக்கம்
சிங்காரவேலுமுதலியாராலும்

—*—)⌣(—*—

சைதாப்பேட்டை
நடேசமுதலியாராலும்
இயற்றியதை
அமரம்பேடு
இரங்கசாமிமுதலியார்
அவர்களது.

---

பூமகள்விலாசஅச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது
௧௮௮௬-௵

உ

சிவமயம்

இராகம்-காபிஏகதாளம்

பல்லவி

அங்கேவரக்கூடாதையா எனக்
அங்கேவரக்கூடாதையா
இங்கேகொருவருமில்லை
செங்கைவேல்முருகா (அங்கே)

சரணங்கள்

திரண்டொருமாதமாய்த்
தெருவாசல்பார்த்தறியேன்
முரண்டுசெய்தால்
முடியாதொருபோதும் (அங்கே)
காற்றுள்ளபோதிலே
தூற்றிக்கொள்ளவேண்டாமோ
ஆற்றுக்குப்போன என்
அன்னைவந்திடுவா (அங்கே)
அருமைப்பதம்பாடும்
அழகியசொக்கநாதன்
பெருமைபெற்றிட அருள்
உருமலைவேலா (அங்கே

இராகம் பூபாளம் தாளம்சாபு.

ஐயோ இனியென்னால்
ஆகவும் மாட்டாது
அருணோதயமாச்சுதே 1147

அநுபல்லவி

சையோகம் இராமுப்பதும்
செய்தகியோதாதோ சாமி
சண்முகநாள்மெத்தச்
சடைந்துபோயிருக்கிறேன் ஐயோ
கரும்புருசியென்று வேரோடுதின்னலாமோ
கசக்கிமோந்தால்புஷ்பம் மணக்குமோசல்லோ
இரும்போஎன்உடம்பினிஎடுக்கஒராண்டுசெல்லும்
இந்தமட்டினில்விடு இருசந்துகோவுது ஐயோ
அளவுக்குமிஞ்சினல் அமிர்தமும்விஷமென்றே
ஆரும்சொல்வார்கேட்டதில்லையோ சித்தம்
இணங்காததேன்சுவர் இருந்தாலல்லவோசித்ரம்
எழுதலாம் ராத்திரிமுழுதும்நித்திரையில்லை ஐயோ
பழகியவடிவேலா உம்மையல்லாமல்மெத்தப்
பக்ஷம்எனக்குண்டோ இப்போ
சழகியசொக்கநாதன்பதங்களைப்பாடுகிறேன் ஐயோ
அதைக்கேளும்இதுநாளைக்காட்டும்கும்பிட்டேன்

# சிங்காரப்பதம்.

## இராகம்-தன்யாசி-ஆதிதாளம்

### பல்லவி

வருவாரோ வாராரோ மாலோ தேனே.

### அநுபல்லவி

சரசமாய்க்கூட
ஷண்முகநாதன்

### சரணங்கள்

| | | |
|---|---|---|
| -கலைமதன் | கூவ | வரு |
| கருங்குயில் | கூவ | |
| கனஸ்மதி | தாவ | |
| கஷ்டம்உற்றிடென்னை | மேவ | வரு |
| | | |
| இங்கிதம் | தேடி | |
| சங்கீதம் | பாடி | |
| இன்பமாய்க் | கூடி | |
| இஷ்டமாயிருந்ததைக்காடி | | வாடி |
| | | |
| அழகியசொக்க | | |
| நாதனைசொல்லு | காமி | |
| அருள்கிருபா | கேமி | |
| இஷ்டஸித்திக்குக்கொழுந்த | சாமி | வரு |

## இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

### பல்லவி

பக்ஷம் இருக்கவேணும்
போய்வாரேன் என்மேல்

### அநுபல்லவி.

இக்ஷணமே என்னைக்கூட்டிவரும்படி
எனக்காகவந்திருக்குதே என்செய்வேன் சாமி

### சரணங்கள்.

புருஷனோடுகெடுங்கோபி
வருஷமும் ஒன்றாய்ச்சு
புகல்சும்மா சொல்வது தர்மமோ இனிப்பக்ஷ

கூடிக்கலந்த இன்பம்
நாடியுருகும் என்னைக்
கொஞ்சமும் மறந்திடக்கூடாது என்றுப் ப

அழகியசொக்கநாதன்
துதிக்கும் ஷண்முகத்தெய்வம்
அன்பால் என்னுல்கூட்டி வைக்குமோ

# சிங்காரப்பதம்

## இராகம்-பூரிகல்யாணி-ஏகதாளம்

### பல்லவி.

எப்போதுகாணுவேனோமானேநான்

### அநுபல்லவி

முப்போதும் மெய்யன்பர்
செப்பிடும்செந்தூர்
முத்தையனைத்தேடி
மெத்தநொந்தேன்சேர — எப்போது

### சரணங்கள்

கோலாகலத்துடனே
மாலாளுர்நாளைக்
கொஞ்சிரஞ்சிதஎன்சாமிஇனி — எப்போது

முன்னம்போலென்னையமாய்
இன்னம்ஒருக்கால்
மூத்தம்கொடுத்துச் சுகித்துவிளையாட — எப்போ
அழகியசொக்கநாதன்
நிதமுஅருள்செய்யும்
அற்புதபொற்பாதசுப்ரமண்யவேலை — எப்போது

## இராகம் சங்கராபரணம்-ஏகதாளம்

### பல்லவி.

இன்னமும்,மோடி,செய்தால்
என்னமா,நான்சகிப்பேன்

### அநுபல்லவி.

பன்னக,பூஷணா;என்மேல், இன்னமும்

### சரணங்கள்

ராமபாணம் போலப்பாயுதே
காமபாணங்கள்
சே,வே
மாமயல்கொண்டேன் இன்னமும்
கலந்த வையமன்னணி
,பின்றோன் சாமி
நானென்ன

செய்குவேன் சாமீ இன்னமும்
தகய அழகியசொக்கே,
தன்போற்றிடும்
செல்வேலி.
மந்தாரரே இன்னமும்

அப்பாமிக ஞாலத்திலே
அய்யாமிக ஞாலத்திலே
சாமிமிகஞாலத்திலே
பாலன்வயித்தியலிங்கம்
பாடி-யாடி-தேடி-கூடி ஞாலத்திலே

சரணம்

திக்குவேறில்லை நீயேதெய்வமேயென்செய்வேன்
அக்கரையில்லையோ ஆதியேசோதியே
பக்குவமாயிங்குவந்து
பாதமலரைத்தருவாய் ஞாலத்திலே
கல்லாலடித்தவனே
கருணைவைத்தாண்டவனே
தில்லையில்வாழ்பவனே
தேடரியாமருந்தே
சொல்லுதற்கரியவனே
சுயம்பிரகாசமே-வெளியே ஞாலத்திலே
சங்கரகங்காதரா
சந்திரசேகரா
மங்கைபங்காளரா
மாலயன்றேடும்பாதா
சேங்கயில்திரிசூலம்
சேர்ந்தொளிர்மகானுபாவா

/3/2

சிங்காரப்பதம்
முற்றிற்று.